65673



සියලු ම හිමිකම් ඇවිරිණි / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved ]

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

සාමාන්‍ය පොදු පරීක්ෂණය
பொதுச் சாதாரணப் பரீட்சை
Common General Test

12 T

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **கணிப்பானைப் பயன்படுத்தக்கூடாது.**
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** 2019 யூலை மாதத்தில் நாட்டில் காணப்பட்ட தலா வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு, உலக வங்கியினால் இலங்கை பின்வருவனவற்றுள் ஒரு வருமான வகுதியினுள் தாபிக்கப்பட்டது. அவ்வருமான வகுதியைத் தெரிவுசெய்க.
(1) கீழ் - நடுத்தர வருமானம்
(2) மேல் - நடுத்தர வருமானம்
(3) சராசரி - நடுத்தர வருமானம்
(4) குறைந்த - உயர் வருமானம்
(5) நடுத்தர - உயர் வருமானம்

**2.** 2019 யூன் மாதத்தில் விண்வெளியில் ஒரு ஒழுக்குக்கு ஏவப்பட்ட இலங்கையின் முதலாவது ஆராய்ச்சிச் செய்மதியின் பெயர் யாது?
(1) ராவணா I (2) ரோகினி I (3) கல்பனா I (4) ராமாயண I (5) ராட்சஸ I

**3.** 2019 ஆம் ஆண்டில் இலங்கையை, சுற்றுலாச் செயற்பாடுகளுக்காக உலகில் முதலாவது இடத்தைப் பெறும் நாடு எனத் தரவரிசைப்படுத்திய உலகப் பிரசித்திப் பெற்ற சஞ்சிகை எது?
(1) ரைம் (Time)
(2) டிஸ்கவரி (Discovery)
(3) லோன்லி பிளனற் (Lonely Planet)
(4) த இகோனொமிஸ்ற் (The Economist)
(5) நெஷனல் ஜியோகிரா∴பிக் (National Geographic)

**4.** கொரோனா வைரசு நோய் (கோவிட்-19) ஆனது இதற்கு முன்னர் மனிதனில் இருந்ததாக இனங்காணப்பட்டிராத ஒரு புதிய வைரசு காரணமாக ஏற்பட்ட ஒரு கொள்ளை நோயாகும். அந்நோய் முதன் முதலாக பதிவாகிய சீன நாட்டு நகரத்தின் பெயர் யாது?
(1) வூஹான் (2) ஹார்பின் (3) குன்மிங்க் (4) நன்ஜிங் (5) யின்சுஆன்

**5.** 2019 திசெம்பர் மாதத்தில் இலங்கையினால் தாய்லாந்தில் சுவீகரித்துக் கொள்ளப்பட்ட 19 இன் கீழ் விளையாட்டு வெற்றிக் கிண்ணம் யாது?
(1) ஆசிய ஆண்கள் வொலிபோல் கிண்ணம்
(2) ஆசிய கிறிக்கட் கவுன்சில் கிண்ணம்
(3) ஆசிய உதைபந்து அமைப்புக் கிண்ணம் (AFC)
(4) ஆசிய ரக்பி முதலாம் பிரிவு கிண்ணம் (Division I)
(5) ஆசிய ரக்பி இரண்டாம் பிரிவு கிண்ணம் (Division II)

**6.** இந்தியப் பாராளுமன்றம் தமது அயல் நாடுகள் மூன்றிலிருந்து வருகைதந்த சிறுபான்மைச் சமயப் புலம் பெயர்வோருக்காக இந்திய குடியுரிமை வழங்கும் சட்டமொன்றினை 2019 திசெம்பர் மாதத்தில் நிறைவேற்றியது. அம்மூன்று நாடுகளும் யாவை?
(1) பங்களாதேஷ், ஆப்கானிஸ்தான், இலங்கை
(2) பங்களாதேஷ், ஆப்கானிஸ்தான், நேபாளம்
(3) பாகிஸ்தான், பங்களாதேஷ், இலங்கை
(4) பாகிஸ்தான், பங்களாதேஷ், நேபாளம்
(5) பாகிஸ்தான், பங்களாதேஷ், ஆப்கானிஸ்தான்

Department of Examinations - Sri Lanka

[பக் 2 ஐப் பார்க்க.

**7.** 2020 சனவரி மாதத்தில் விசேட சூரிய கிரகணமொன்று இலங்கைக்குக் காட்சியளித்தது. விஞ்ஞானிகளின் கூற்றுப்படி இவ்வாறான அடுத்த சூரிய கிரகணம் 2031 மே மாதத்திலேயே இலங்கைக்குக் காட்சி தரும். அச்சூரிய கிரகண வகை எது?
(1) உப (2) பூரண (3) பகுதி (4) கலப்பு (5) கங்கண

**8.** இலங்கையில் திட்டமிடப்பட்டு உற்பத்தி செய்யப்பட்ட Vega EVX (வேகா EVX) எனும் மோட்டர் கார் 2020 மார்ச் மாதத்தில் சுவிற்சர்லாந்து நாட்டு ஜெனீவா சர்வதேச மோட்டர் வாகனக் கண்காட்சியில் உத்தியோகபூர்வமாக அறிமுகஞ் செய்யப்பட்டது. Vega EVX என்பது ஒரு,
(1) கலப்பு வகை மோட்டர் வாகனம் ஆகும்.
(2) பூரண மின் சுப்பர் மோட்டர் வாகனம் ஆகும்.
(3) போர்மியூலா வகை ஓட்டப்பந்தய மோட்டர் வாகனம் ஆகும்.
(4) ஐதரசன் மூலம் செலுத்தப்படும் மோட்டர் வாகனம் ஆகும்.
(5) விளையாட்டுப் பயன்பாட்டு வாகனம் (SUV) ஆகும்.

**9.** 2019 ஆம் ஆண்டில் பரிஸ் நகரில் அமைந்துள்ள உலகப் பிரசித்திப் பெற்ற தேவாலயமொன்று தீப்பற்றியதால் அதிக இழப்பு ஏற்பட்டது. அத்தேவாலயத்தின் பெயர் யாது?
(1) நோத்ர தாம் தேவாலயம் (2) கொலொங்க் தேவாலயம்
(3) கன்ரபரி தேவாலயம் (4) புனித போல் தேவாலயம்
(5) புனித பற்றிக் தேவாலயம்

**10.** 2020 சனவரி மாதத்தில் நடந்த ஐக்கிய நாடுகள் சபையின் நாடுகளுக்கு இடையிலான ஓர் அமைப்பினது 43 ஆம் அமர்வின்போது "40/1 பிரேரணையின் சம அனுசரணைத்துவத்திலிருந்து" இலங்கை தன்னை விலக்கிக் கொண்டது. அவ்வமைப்பின் பெயர் யாது?
(1) ஐக்கிய நாடுகள் பாதுகாப்புச் சபை
(2) ஐக்கிய நாடுகள் பொருளாதார, சமூக சபை
(3) ஐக்கிய நாடுகள் அபிவிருத்தி வேலைத்திட்டம் (UNDP)
(4) ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் பேரவை
(5) ஐக்கிய நாடுகள் கல்வி, விஞ்ஞான, கலாசார அமைப்பு (UNESCO)

**11.** 50 ஓவர் கிரிக்கற் போட்டியொன்றின் வெற்றி இலக்கு 309 ஓட்டங்களாகும். 10 ஆம் ஓவர் முடிவில் ஓட்டம் பெறும் வேகம் 4.5 ஆக இருந்தது. எஞ்சியுள்ள 40 ஓவர்களில் வெற்றி இலக்கை அடைவதற்குத் தேவையான குறைந்தபட்ச ஓட்டம் பெறும் வேகம் எவ்வளவு?
(1) 6.4 (2) 6.5 (3) 6.6 (4) 7.5 (5) 7.6

**12.** மணிக்கு 60 கிலோமீற்றர் வேகத்தில் பயணிக்கும் 200 மீற்றர் நீளமான ஒரு புகையிரதம், ஒரு சுரங்கத்தைக் கடப்பதற்கு 30 செக்கன் எடுத்தது. சுரங்கத்தின் நீளம் எத்தனை மீற்றர்?
(1) 270 (2) 290 (3) 300 (4) 310 (5) 320

**13.** அருண் ஒரு தொகைப் பணத்தை, முதலிரண்டு வருடங்களில் ஆண்டுக்கு 6% உம் அடுத்த மூன்று வருடங்களில் ஆண்டுக்கு 5% உம் ஐந்து வருடங்களின் பின்னர் ஆண்டுக்கு 4% உம் என்ற எளிய வட்டி விகிதத்தின் கீழ் கடனாகப் பெற்றார். 10 வருடங்களின் பின்னர் அவர் செலுத்திய மொத்த வட்டிப்பணம் ரூ. 11 750 எனின், அவர் கடனாகப் பெற்ற பணத்தொகை எவ்வளவு?
(1) ரூ. 23 500 (2) ரூ. 24 000 (3) ரூ. 24 500 (4) ரூ. 25 000 (5) ரூ. 25 500

**14.** பேர்ச் ஒன்றில் ரூ. 8 000 வீதம் இலாபம் ஈட்டக்கூடியவாறு விற்பனை செய்யும் நோக்கில் திரு.நாதன் காணித்துண்டொன்றினை கொள்வனவு செய்தார். இக்காணிக்கு ஒரு பேர்ச்சுக்கு ரூ. 34 000 வீதம் செலுத்த விரும்பும் கொள்வனவாளர் ஒருவர் உள்ளாரெனினும், அது திரு.நாதன் ஒரு பேர்ச்சுக்குச் செலுத்திய தொகையிலும் 15% குறைவானதாகும். திரு.நாதன் ஒரு பேர்ச் காணிக்காக எதிர்பார்க்கும் பணத்தொகை யாது?
(1) ரூ. 47 000 (2) ரூ. 48 000 (3) ரூ. 50 000 (4) ரூ. 51 000 (5) ரூ. 52 000

**15.** பவன் $A$ நகரத்திலிருந்து $B$ நகரத்துக்கு மோட்டர் வாகனத்தில் செல்கின்றார். அவர் பயணத்தின் முதலாவது மூன்றிலொன்றை 30 km $h^{-1}$ இடை வேகத்திலும், மீதித் தூரத்தை 40 km $h^{-1}$ இடை வேகத்திலும் வாகனத்தைச் செலுத்துகின்றார். $A$ யிலிருந்து $B$ வரையிலான முழுப்பயணத்துக்காக 4 மணித்தியாலம் செலவாகியது. $A$ இற்கும் $B$ இற்கும் இடையிலான தூரம் எத்தனை கிலோமீற்றர்?
(1) 136 (2) 140 (3) 144 (4) 150 (5) 180

**16.** நிமலன் ரூபாய் 500 000 ஐ முதலீடு செய்து வணிகமொன்றினை ஆரம்பித்தார். நான்கு மாதங்களின் பின்னர் காதர் ரூபாய் 750000 பணத்துடன் வணிகத்தில் பங்காளராகச் சேர்ந்து கொண்டார். வணிகத்தைத் தொடங்கி மூன்று வருடங்களின் பின்னர் அவர்கள் ஈட்டிய இலாபத்தை ஒவ்வொருவரும் இட்ட பணம், காலம் ஆகிய இரண்டுக்கும் விகித சமமாக பகிர்ந்து கொள்வார்களாயின் நிமலன், காதர் பெற்ற இலாபங்களுக்கிடையிலான விகிதம் யாது?
(1) 3 : 4 (2) 3 : 5 (3) 4 : 3 (4) 4 : 5 (5) 5 : 3

Department of Examinations - Sri Lanka

**17.** 10 பிள்ளைகளைக் கொண்ட ஒரு குழுவில் மிக இளையவரின் வயது 8 வருடங்களாவதோடு மிக மூத்தவரின் வயது 16 வருடங்கள் ஆகும். இப்பிள்ளைகளது வயதுகளின் கூட்டுத்தொகை 120 வருடங்கள் எனின் 12 வருடத்துக்கும் 16 வருடத்திற்கும் இடைப்பட்ட வயதுடைய **குறைந்தபட்ச** பிள்ளைகளின் எண்ணிக்கை யாது?

(1) 0 (2) 1 (3) 2 (4) 3 (5) 4

**18.** செவ்வகமொன்றின் நீளம் 25% இனால் குறைக்கப்படுவதோடு அதன் அகலம் 50% இனால் அதிகரிக்கப்படுகின்றது. அச்செவ்வகத்தின் பரப்பளவில் ஏற்படும் மாற்றம் சதவீதத்தில் எவ்வளவாகும்?

(1) 12.5% குறையும் (2) 12.5% அதிகரிக்கும் (3) 25% குறையும்
(4) 25% அதிகரிக்கும் (5) 30% அதிகரிக்கும்

**19.** ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று காலை 6.00 மணிக்கு திரு.பர்னாந்து, மறுநாள் திங்கட்கிழமை பிற்பகல் 1.00 மணிக்கு ஒலியெழுப்புமாறு கடிகாரத்தின் மணியை ஒழுங்குபடுத்தினார். அக்கடிகாரத்தில் ஒரு வழு உண்டு என்பதை அவர் அறிந்திருக்கவில்லை. அக்கடிகாரம் சீராக ஒவ்வொரு மணித்தியாலத்துக்கும் இரண்டு நிமிடம் வீதம் கூடுதலாக நேரத்தைக் காட்டுகின்றது. திங்கட்கிழமை மணி அடிக்கும்போது சரியான நேரம் யாது?

(1) முற்பகல் 11.58 (2) நண்பகல் 12.00 (3) பிற்பகல் 12.02
(4) பிற்பகல் 12.58 (5) பிற்பகல் 1.02

**20.** சாந்தி 2020 பெப்ரவரி 29 ஆந் திகதி சனிக்கிழமை பிறந்தார். மீண்டும் அவரது பிறந்த நாள் பெப்ரவரி 29 சனிக்கிழமையாக அமையக்கூடிய மிகக்கிட்டிய ஆண்டு எது?

(1) 2040 (2) 2044 (3) 2048 (4) 2052 (5) 2056

**21.** சித்திப் புள்ளி 20 ஆகவுள்ள சோதனையொன்றுக்கு ஐந்து மாணவர்கள் தோற்றியிருந்தனர். அவர்கள் அனைவரும் சோதனையில் சித்தியடைந்ததோடு, அவர்கள் பெற்ற புள்ளிகளின் கூட்டுத்தொகை 105 ஆகும். சோதனையில் உச்சப் புள்ளிகளைப் பெற்ற இரண்டு மாணவர்கள் இருப்பார்கள் எனின், அவ் உச்சப்புள்ளி எதுவாக இருக்க முடியும்?

(1) 22 (2) 23 (3) 24 (4) 25 (5) 26

**22.** ஒரு தொழிற்சாலைக்கு ஒரு குறித்த உருப்படியை உற்பத்தி செய்வதற்காக அவசர கோரிக்கையொன்று கிடைத்திருக்கின்றது. அங்கு அந்த உருப்படியை உற்பத்தி செய்யக்கூடிய $A, B, C$ எனும் மூன்று பொறிகள் உள்ளன. பொறி $A$ யினால் மொத்தக் கோரிக்கையையும் 4 மணித்தியாலங்களில் பூர்த்தி செய்ய முடியும். $B$ யினாலும் $C$ யினாலும் முறையே 5, 6 மணித்தியாலங்களில் அதனைப் பூர்த்தி செய்யலாம். தொழிற்சாலை முகாமையாளர் இந்தக் கோரிக்கையைப் பூர்த்தி செய்வதற்காக மூன்று பொறிகளையும் பயன்படுத்துவது எனத் தீர்மானித்து ஏககாலத்தில் மூன்று பொறிகளையும் இயக்குவித்தார். சரியாக ஒரு மணித்தியாலத்தின் பின்னர் பொறி $B$ இல் கோளாறு ஏற்பட்டு இயக்கம் தடைப்பட்டது. அவ்வேலையினைச் செய்து முடிப்பதற்காக மற்றைய இரண்டு பொறிகளுக்கும் மேலும் எவ்வளவு நேரம் எடுக்கும்?

(1) ஒரு மணித்தியாலத்தைவிட சற்றுக் குறைய
(2) சரியாக ஒரு மணித்தியாலம்
(3) ஒரு மணித்தியாலத்தைவிட சற்றுக் கூடுதலாக
(4) இரண்டு மணித்தியாலத்தைவிட சற்றுக் குறைய
(5) இரண்டு மணித்தியாலத்தைவிட சற்றுக் கூடுதலாக

**23.** இக்கோலத்தின் இறுதிக் கட்டத்தில் வரவேண்டிய எண் யாது?

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 5 | 5 | 10 | 30 | 120 | 600 | 3600 | ? |

(1) 22 400 (2) 24 200 (3) 25 200 (4) 25 400 (5) 26 200

**24.** உருவில் காட்டியுள்ள விரிவைப் பயன்படுத்தி அமைக்கக்கூடிய சதுரமுகியில் ஒன்றுக்கொன்று எதிரான முகப்புகளில் காணக்கூடிய குறியீட்டுச் சோடி பின்வருவனவற்றுள் எது?



(1) ✶ உம் ○ உம் (2) ✶ உம் □ உம்
(3) △ உம் + உம் (4) ◇ உம் □ உம்
(5) △ உம் □ உம்

Department of Examinations - Sri Lanka

**25.** 

தரப்பட்டுள்ள உருவத்தின் எதிரே தளவாடி வைக்கப்பட்டுள்ளது. உருவத்தின் சரியான தளவாடி விம்பத்தை கீழே தரப்பட்டுள்ள உருக்களிலிருந்து தெரிவுசெய்க.


(1)


(2)


(3)


(4)


(5)

● **26, 27** ஆகிய வினாக்கள் 2014 - 2018 ஆண்டு காலப்பகுதியில் இலங்கையின் இறக்குமதி, ஏற்றுமதியைக் காட்டும் பின்வரும் வரைபை அடிப்படையாகக் கொண்டவை.




**26.** 2014 தொடக்கம் 2018 வரையிலான காலப்பகுதியில் எத்தனை ஆண்டுகளில் இறக்குமதிப் பெறுமானமானது ஏற்றுமதிப் பெறுமானத்தின் 150% இலும் கூடுதலாகக் காணப்பட்டுள்ளது?

(1) 1 (2) 2 (3) 3 (4) 4 (5) 5

**27.** 2014 தொடக்கம் 2018 வரையிலான காலப்பகுதியில் இறக்குமதிகளின் **இடை ஆண்டு வளர்ச்சி வீதம்** அண்ணளவாக எவ்வளவு?

(1) 5% (2) 10% (3) 15% (4) 20% (5) 40%

● **28 , 29** ஆகிய வினாக்கள் பின்வரும் தகவல்களை அடிப்படையாகக் கொண்டவை.

அனுர, பானு, காஸிம், டேவிட் ஆகிய நான்கு பிள்ளைகள் ஒரு வீட்டின் முன்புறத்திலுள்ள வீட்டுத்தோட்டத்தில் இறப்பர் பந்தொன்றைக் கொண்டு விளையாடிக்கொண்டிருந்த வேளையில் ஒரு பிள்ளை கவனமின்றி எறிந்த பந்து வீட்டின் யன்னலில் பட்டதால் யன்னற் கண்ணாடி உடைந்தது. யன்னற் கண்ணாடியை உடைத்தவர் யார் என்பது குறித்து அந்தப் பிள்ளைகள் கூறியவை வருமாறு,

- ✱ அனுர : அதனை உடைத்தவர் பானு.
- ✱ பானு : அனுர சொல்வது பொய்.
- ✱ காஸிம் : அதனை உடைத்தவர் அனுர.
- ✱ டேவிட் : அதனை உடைத்தவர் நான் அல்ல.

**28.** பிள்ளைகளுள் ஒருவர் மாத்திரமே உண்மை கூறுகின்றார் எனின் யன்னற் கண்ணாடியை உடைத்தவர் யார்?

(1) அனுர (2) பானு (3) டேவிட்
(4) அனுர அல்லது காஸிம் (5) பானு அல்லது காஸிம்

**29.** சரியாக இரண்டு பிள்ளைகள் உண்மை கூறுகின்றனர் எனின் யன்னற் கண்ணாடியை உடைத்தவர் யார் ?

(1) அனுர (2) பானு (3) காஸிம்
(4) அனுர அல்லது காஸிம் (5) பானு அல்லது காஸிம்

Department of Examinations - Sri Lanka

[பக் 5 ஐப் பார்க்க.

● **30, 31** ஆகிய வினாக்கள் பின்வரும் தகவல்களை அடிப்படையாகக் கொண்டவை.
சாரதியொருவர் தனது வாகனத்தை அதிவேகப் பாதையில் 150 km தூரத்தை 90 km $h^{-1}$ சீரான வேகத்தில் செலுத்துவதற்கு எதிர்பார்த்தார். அவர் அதற்கமைய வாகனத்தை செலுத்தினாரெனினும் இடைவழியே சீரற்ற பாதை நிலைமை காரணமாக 15 km தூரத்தை 75 km $h^{-1}$ சீரான வேகத்தில் செலுத்த நேரிட்டது.

**30.** சாரதி பயணத்திற்காக செலவழிப்பதற்கு எதிர்பார்த்த நேரம் எத்தனை நிமிடங்கள்?
(1) 72 (2) 90 (3) 100 (4) 120 (5) 160

**31.** வேகத்தைக் குறைத்ததன் காரணமாக, எதிர்பார்த்த நேரத்தை விட எத்தனை நிமிடங்களால் பயணம் தாமதமாகியது?
(1) 1 (2) 2 (3) 3 (4) 4 (5) 5

● **32, 33** ஆகிய வினாக்களில் ஒன்றுக்கொன்று வேறுபட்ட சில பொருள்களின் ஒரு குறித்த இயல்பை ஒப்பிடுவதற்காக, அவ்வொவ்வொரு பொருளையும் குறியீட்டினால் காட்டி அவற்றை ≤, =, ≥ போன்ற கணிதக் குறியீடுகளின் இயல்புகளினால் வரிசைப்படுத்தும் சேர்மானக் கோவை ஒவ்வொன்று வீதம் தரப்பட்டுள்ளது. பின்னர் அக்கோவையிலிருந்து பெற்ற இரண்டு முடிபுகள் தரப்பட்டுள்ளன.

* முடிபு I மாத்திரம் உண்மை எனின் *A* ஐத் தெரிவுசெய்க.
* முடிபு II மாத்திரம் உண்மை எனின் *B* ஐத் தெரிவுசெய்க.
* முடிபு I, முடிபு II ஆகிய இரண்டும் உண்மை எனின் *C* ஐத் தெரிவுசெய்க.
* முடிபு I முடிபு II ஆகியவற்றுள் ஒன்று மாத்திரம் உண்மை எனின் *D* ஐத் தெரிவுசெய்க.
* முடிபு I, முடிபு II ஆகிய இரண்டில் ஒன்றேனும் உண்மையல்ல எனின் *E* ஐத் தெரிவுசெய்க.

**32.** கோவை ✌ ≤ 👌 ≤ 👍 = 👎 உம் ☜ ≥ ☝ ≥ 👎 உம்

முடிபு I : ✌ < ☜

முடிபு II : ✌ = ☜

(1) *A* (2) *B* (3) *C* (4) *D* (5) *E*

**33.** கோவை ✌ > 👌 ≥ 👍 > 👎 ≥ ☜ உம் 👎 ≤ ☜ ≤ ☝ < ☞ உம்

முடிபு I : 👎 < ☞

முடிபு II : 👌 > ☝

(1) *A* (2) *B* (3) *C* (4) *D* (5) *E*

● **34, 35** ஆகிய வினாக்கள், *A*, *B*, *C*, *D*, *E*, *F* ஆகிய ஆறு நகரங்களின் சார் அமைவு தொடர்பாக கீழே தரப்பட்டுள்ள விவரத்தை அடிப்படையாகக் கொண்டவை.
*A* இற்கு 80 கிலோமீற்றர் தெற்கே *B* அமைந்துள்ளது. *A* ஐயும் *B* ஐயும் இணைக்கும் கோட்டின் சரி நடுவில் *C* அமைந்துள்ளது. *A* இற்கு 30 கிலோமீற்றர் மேற்கில் *D* அமைந்துள்ளதோடு, *C* இற்கு மேற்கே *F* அமைந்துள்ளது. *F* இற்குத் தெற்கிலும் *B* இலிருந்து 40 கிலோமீற்றர் மேற்கிலும் *E* அமைந்துள்ளது.

**34.** *A* நகரத்துக்கு சார்பாக *F* நகரம் அமைந்துள்ள திசை யாது?
(1) வடக்கு (2) தெற்கு (3) வடமேற்கு (4) தென்கிழக்கு (5) தென்மேற்கு

**35.** *C* நகரத்துக்கும் *D* நகரத்துக்கும் இடையிலான நேர்கோட்டுத் தூரம் எத்தனை கிலோமீற்றர்?
(1) $40\sqrt{2}$ (2) 50 (3) $50\sqrt{2}$ (4) $85\sqrt{2}$ (5) 100

● **36, 37, 38** ஆகிய வினாக்கள் பின்வரும் விவரத்தை அடிப்படையாகக் கொண்டவை.
ஒரு குறித்த ஆண்டில் க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சையில் வணிகப் பாடத்துறையில் நாட்டின் முதல் ஐந்து இடங்களைப் பெற்ற மாணவர்கள் முறையே யாழ்ப்பாணம், காலி, கொழும்பு, கம்பஹா, அம்பாறை ஆகிய மாவட்டங்களை பிரதிநிதித்துவப்படுத்தினர். அம்மாணவர் ஐவரின் பெயர்கள் *A*, *B*, *C*, *D*, *E* ஆகும். அவர்கள் தெரிவுசெய்த பட்டக் கற்கைநெறிகளாவன கணக்கீடு, சந்தைப்படுத்தல், நிதியியல், வணிகவியல், வங்கியியல் ஆகியன ஆகும். எனினும் இவை எவ்வகையிலும் அதே ஒழுங்குமுறைப்படி தரப்படவில்லை.

* முதலாம் இடத்தைப் பெற்ற மாணவன் வணிகவியல் பட்டத்தைத் தெரிவுசெய்தார்.
* வங்கியியல் பட்டத்தை தெரிவுசெய்த மாணவன் பெற்ற இடம் வணிகவியல் பட்டத்தையும் சந்தைப்படுத்தல் பட்டத்தையும் தெரிவுசெய்த மாணவர் பெற்ற இடங்களுக்கு இடைப்பட்டது.
* ஐந்தாம் இடத்தைப் பெற்ற மாணவன் நிதியியல் பட்டத்தைத் தெரிவுசெய்தார்.
* கம்பஹா மாவட்ட மாணவன் கணக்கீட்டுப் பட்டத்தைத் தெரிவுசெய்தார்.
* *A*, *D* ஆகியோர் அடுத்தடுத்த இரண்டு இடங்களைப் பெற்றுள்ளனர்.
* *E* சந்தைப்படுத்தல் பட்டத்தைத் தெரிவுசெய்துள்ளார்.
* *B* பெற்ற இடம், *C* இனதும் *E* இனதும் இடங்களுக்கு இடைப்பட்டது.
* *D* பெற்ற இடம் 5 ஆகும்.

Department of Examinations - Sri Lanka

[பக் 6 ஐப் பார்க்க.

**36.** கம்பஹா மாவட்ட மாணவன் யார்?
(1) *A* (2) *B* (3) *C* (4) *D* (5) *E*

**37.** யாழ்ப்பாண மாவட்ட மாணவன் யார்?
(1) *A* (2) *B* (3) *C* (4) *D* (5) *E*

**38.** காலி மாவட்ட மாணவன் கற்கைக்காக தெரிவுசெய்த பட்டம் யாது?
(1) நிதியியல் (2) வணிகவியல் (3) சந்தைப்படுத்தல்
(4) வங்கியியல் (5) கணக்கீடு

- **39, 40** ஆகிய வினாக்கள், ஒவ்வோர் ஆங்கில எழுத்தும் தனியே ஒவ்வோர் எண்குறியீட்டினைக் குறித்துக் காட்டும் வகையில் ஆங்கில எழுத்துக்களைக் குறிப்பதற்காக 0 தொடக்கம் 9 வரையிலான எண்குறியீடுகளைக் கொண்டு ஆக்கப்பட்ட குறியீட்டு முறையொன்றினை அடிப்படையாகக் கொண்டவை.

**39.** NORTHWESTERN என்பதைக் குறியீட்டுமுறையில் காட்டுவதற்காக பின்வருவனவற்றுள் எதனைப் பயன்படுத்தலாம்?
(1) 654270832846 (2) 654270832146 (3) 654270832946
(4) 654270839846 (5) 654170832946

**40.** பின்வரும் எந்தச் சொல்லை 0832846159323 எனும் குறியீட்டினால் காட்டலாம்?
(1) SOUTHEASTERNS (2) SOUTHWESTERNS
(3) WESTERNHABITS (4) WESTERNCOASTS
(5) NORTHERNCOAST

- **41, 42** ஆகிய வினாக்கள் ஒரு குறித்த தொழிலுக்காக விண்ணப்பதாரிகள் பூர்த்தி செய்ய வேண்டிய தேவைகளை அடிப்படையாகக் கொண்டவையாகும். அத் தேவைகள் கீழேயுள்ள கட்டத்தினுள் பட்டியற்படுத்தப்பட்டுள்ளன.

**விண்ணப்பதாரி பூர்த்தி செய்ய வேண்டுமென எதிர்பார்க்கப்படும் தேவைகள்**

1. 2020 ஏப்ரல் 1 ஆந் திகதியன்று வயது 20 வருடங்களுக்கு மேற்பட்டதாக இருப்பதோடு 27 இற்கு மேற்படாது இருத்தல்

**அத்தோடு**

2. க.பொ.த. (உயர் தர) கணித பாடத்துறையில், குறைந்தபட்சம் மூன்று S சித்திகளை **அல்லது** க.பொ.த. (சாதாரண தர)த்தில் கணிதத்தில் குறைந்தபட்சம் C சித்தியுடன் க.பொ.த. (உயர் தர)த்தில் வேறு ஏதாவது பாடத்துறையில், குறைந்தபட்சம் இரண்டு C சித்திகளும் ஒரு S சித்தியும் பெற்றிருத்தல்.

**அத்தோடு**

3. க.பொ.த. (சாதாரண தர) ஆங்கில பாடத்தில் குறைந்தபட்சம் C சித்தி பெற்றிருத்தல்.

**அத்தோடு**

4. பொதுச் சாதாரணப் பரீட்சையில் (CGT) 70 இற்கு மேற்பட்ட புள்ளி பெற்றிருத்தல்.

**எவ்வாறாயினும்,**

(i) மேற்படி இல 3 ஐத் தவிர ஏனைய சகல தேவைகளையும் பூர்த்தி செய்துள்ளதோடு க.பொ.த. (உயர் தர) ப் பரீட்சைக்கு ஆங்கில மொழிமூலம் தோற்றியுள்ள ஒருவரை, கம்பனிப் பொதுமுகாமையாளரின் இணக்கப்பாட்டின் பேரில் இப்பதவிக்காகக் கவனத்திற்கொள்ள இடமுண்டு.

(ii) மேற்படி இல 4 ஐத் தவிர ஏனைய சகல தகைமைகளையும் பூர்த்தி செய்துள்ளதோடு ஏற்றுக்கொள்ளப்பட்ட பல்கலைக்கழகமொன்றில் பட்டம் பெற்றுள்ள ஒருவரை கம்பனித் தவிசாளரின் இணக்கப்பாட்டின் பேரில் இப்பதவிக்காகக் கவனத்திற்கொள்ள இடமுண்டு.

ஒவ்வொரு வினாவிலும் தரப்பட்டுள்ள தகவலின் பிரகாரம்

நபர் விண்ணப்பிக்கத் தகுதியானவரெனின் .................... *a* எனவும்
தகைமையைத் தீர்மானிப்பதற்குத் தரப்பட்டுள்ள தகவல்கள் போதுமானவையல்ல எனின் .... *b* எனவும்
கவனத்திற்கொள்ள பொதுமுகாமையாளரின் இணக்கப்பாடு தேவையெனின் .................... *c* எனவும்
கவனத்திற்கொள்ள தவிசாளரின் இணக்கப்பாடு தேவையெனின் .................... *d* எனவும்
நபர் விண்ணப்பிக்க பொருத்தமானவரல்ல எனின் .................... *e* எனவும்
தெரிவுசெய்க

**41.** 2000 மார்ச் 31 ஆந் திகதி பிறந்த அனுஷா க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சையில் வணிகக்கல்வியில் C சித்தியும் பொருளியலில் S சித்தியும் கணக்கியலில் B சித்தியும் பெற்றதோடு CGT இல் 72 புள்ளிகளும் பெற்றுள்ளார். அவர் க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சையில் ஆங்கிலத்தில் B சித்தி பெற்றுள்ளார்.
(1) *a* (2) *b* (3) *c* (4) *d* (5) *e*

[பக் 7 ஐப் பார்க்க.

Department of Examinations - Sri Lanka

**42.** 1994 மார்ச் 31 ஆந் திகதி பிறந்த பாலா, க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சைக்கு ஆங்கிலமொழி மூலம் கணிதத்துறையில் தோற்றி மூன்று B சித்திகளும் CGT இல் 75 புள்ளிகளும் பெற்றுள்ளதோடு பின்னர் எந்திரவியல் பட்டமும் பெற்றுள்ளார்.

(1) *a* (2) *b* (3) *c* (4) *d* (5) *e*

● **43, 44** ஆகிய வினாக்கள் பின்வரும் உருவத்தில் உள்ள தகவல்களை அடிப்படையாகக் கொண்டவை.

ஒரு பாடசாலையில் க.பொ.த. (உயர் தர)த்தில் *A*, *B*, *C* ஆகிய பாடங்களைக் கற்கும் மாணவர்கள் முறையே முக்கோணி, வட்டம், செவ்வகம் ஆகியவற்றால் காட்டப்பட்டுள்ளனர்.




**43.** *C* பாடத்தைக் கற்கின்றபோதிலும் *A* பாடத்தையோ *B* பாடத்தையோ **கற்காத** மாணவர்கள் எத்தனை பேர்?

(1) 10 (2) 20 (3) 30
(4) 40 (5) 50

**44.** *A*, *B*, *C* ஆகிய மூன்று பாடங்களுள் **இரண்டை மாத்திரம்** எத்தனை மாணவர்கள் கற்கின்றனர்.

(1) 10 (2) 20 (3) 30
(4) 40 (5) 50

● **45, 46** ஆகிய வினாக்களில், 1, 7 ஆகிய வாக்கியங்களுக்கு இடையே உள்ள *A*, *B*, *C*, *D*, *E* ஆகிய வாக்கியங்கள் சரியான ஒழுங்கில் தரப்படவில்லை. ஏழு வாக்கியங்களுக்கும் இடையே தருக்கரீதியான ஒழுங்குமுறையை உருவாக்கப் பொருத்தமான வரிசைப்படுத்தலைத் தெரிவுசெய்க.

**45.** 1 - இலங்கை அரசு கோவிட்-19 பொருளாதார மீளெழுச்சி வேலைத்திட்டத்தின் ஒரு பகுதியாக சில உற்பத்திகள் மீது விதித்திருந்த இறக்குமதிக் கட்டுப்பாடுகளை அண்மையில் நீக்கியது.

*A* - அத்தோடு இறக்குமதிகள் மீது தங்கியிருப்பதைத் தவிர்ப்பதற்காக சுதேச வழங்கல் சங்கிலிக்கு வலுவூட்டுவதற்கு அது துணையாக அமையும்.

*B* - "விவசாயம், சேவைகள் மற்றும் நிர்மாணங்கள் தொடர்பான வாகனங்கள் தவிர்ந்த மோட்டர் சைக்கிள், முச்சக்கர வண்டி உள்ளிட்ட மோட்டர் வாகன இறக்குமதியை நிறுத்துதல் " இது தொடர்பான வழிகாட்டல்களில் காட்டப்பட்டிருந்தது.

*C* - மோட்டர் வாகன இறக்குமதித் தடை மாற்றமின்றிக் காணப்பட்டது.

*D* - வெளிநாட்டுச் செலாவணி நெருக்கடி காரணமாக உற்பத்திகளின் இறக்குமதி மீது விதிக்கப்பட்ட தற்காலிகத் தடை முதல் தடவையாக இந்த வருடம் ஏப்ரல் மாதத்திலேயே செயலுருப்படுத்தப்பட்டது.

*E* - நாட்டுப் பொருளாதார மீளெழுச்சித் திட்டமானது செலாவணி விகிதத்தை உறுதிப்படுத்துவதனை இலக்காகக் கொண்டுள்ளது.

7 - பொருளாதார மீளெழுச்சித் திட்டத்தின் ஒரு பகுதியாக, சுதேச உற்பத்திகளுக்கு ஊக்கமளிப்பதற்காக சில பண்டங்கள் மீது விசேட வியாபார வரி உயர்மட்டங்களில் பேணிவரப்படும்.

(1) *C, D, B, A, E* (2) *C, D, B, E, A* (3) *D, B, C, E, A*
(4) *D, C, B, A, E* (5) *D, C, B, E, A*

**46.** 1 - தென்னை, பலா, கித்துள் போன்ற தால வர்க்கத் தாவரங்கள் இலங்கையில் வளர்கின்றன.

*A* - தெங்குப் பயிர்ச்செய்கைச் சபை அண்மையில்"உலர் வலய தென்னை முக்கோணம்" எனும் பெயரில் மற்றுமொரு தென்னை முக்கோணத்தைப் பிரகடனப்படுத்தியுள்ளது.

*B* - நாட்டின் ஒட்டுமொத்த தென்னை பயிரிடும் நிலப்பரப்பின் 56% வடமேல் மாகாணத்திலும்(குருணாகல், புத்தளம் மாவட்டங்கள்) மேல் மாகாணத்தின் ஒரு பகுதியிலும் (கம்பஹா மாவட்டம்) அமைந்துள்ளது.

*C* - இது மன்னார், முல்லைத்தீவு, யாழ்ப்பாணம் ஆகிய மாவட்டங்களைச் சேர்ந்த பிரதேசங்களை உள்ளடக்கியுள்ளது.

*D* - அப்பிரதேசம் "தென்னை முக்கோணம்" எனப்படுகிறது.

*E* - நாட்டின் சகல பகுதிகளிலும் தென்னைப் பயிர் காணப்பட்ட போதிலும் மேல், வடமேல் மற்றும் தென் மாகாணங்கள் தென்னை பயிரிடும் பிரதான பிரதேசங்கள் ஆகும்.

7 - நாட்டில் மொத்த தென்னைப் பயிர்ச்செய்கையைத் துரிதமாக விருத்தி செய்வதற்காகவே அவ்வாறு செய்யப்பட்டது.

(1) *B, E, D, A, C* (2) *B, E, D, C, A* (3) *E, B, D, A, C*
(4) *E, B, D, C, A* (5) *E, D, B, A, C*

[பக் 8 ஐப் பார்க்க.

Department of Examinations - Sri Lanka

**47.** பின்வரும் சித்திரங்களால் விவரிக்கப்படும் சம்பவத்தை கவனத்திற் கொள்ளுங்கள்




அச்சம்பவத்தின் சரியான ஒழுங்கைக் காட்டும் வரிசைப்படுத்தல் பின்வருவனவற்றுள் எது?

(1) *D A C F E B* (2) *D A F C E B* (3) *D A F E C B*
(4) *D C A F E B* (5) *D C F A E B*

- **48, 49, 50** ஆகிய வினாக்கள் பின்வரும் உரையாடலை அடிப்படையாகக் கொண்டவை.

இங்கு *A* தொடக்கம் *K* வரை கணவன், தனது மனைவியை அரச வைத்தியசாலையொன்றில் அனுமதிப்பதற்காக அவசர நோயாளர் காவு வண்டி சேவையினைப் பெற்றுக்கொள்வதற்காக 1990 எனும் இலக்கத்துக்குத் தொலைபேசியில் அழைப்பது தொடக்கம் அவரது மனைவியை வைத்தியசாலையில் அதிதீவிர சிகிச்சைப் பிரிவில் (ICU) அனுமதித்து வைத்தியரைச் சந்திப்பது வரையிலான நேரத்துள் அவருக்கும் ஏனையோருக்கும் இடையே இடம்பெற்ற உரையாடலின் ஒரு பகுதி ஆகும். இந்த உரையாடற் பகுதிகள் சரியான ஒழுங்கில் தரப்படவில்லை.

*A* - நோயாளியினால் பேச முடியாது, நோயாளியுடன் வெளிநோயாளர் பிரிவுக்கு (OPD) வந்திருப்பவர் யார்?
*B* - மாலை வணக்கம், இது அவசர நோயாளர் காவு வண்டிச் சேவை, நீங்கள் எங்கிருந்து அழைக்கிறீர்கள்? உங்களுக்கு நாங்கள் என்ன செய்ய வேண்டும்?
*C* - உடனே பதிலளித்தமைக்கு நன்றி. நோயாளியினால் நடக்க முடியாது. முகவரி 532, கொழும்பு வீதி, அரசமரச் சந்தி, பேராதனை. அந்த அரசமரச் சந்தியிலிருந்து கொழும்பு நோக்கி 200 மீற்றர் தூரத்தில்.
*D* - நான் பேராதனையிலிருந்து பேசுகிறேன். எனது மனைவிக்கு வலிப்பு ஏற்பட்டிருக்கிறது. அவருக்கு நடக்கவோ பேசவோ முடியாது. அவரை பேராதனை வைத்தியசாலைக்கு கொண்டு செல்ல உங்களது உதவி எனக்குத் தேவை.
*E* - டொக்டர் ஐயா, நான் நோயாளியுடன் வந்தேன். அவள் என்னுடைய மனைவி.
*F* - ஐயா கொஞ்சம் பொறுங்கள், எமது கண்டிக் குழுவினர் விரைவில் உங்களுடன் தொடர்பு கொள்வார்கள்.
*G* - இது கிளினிக் அறிக்கைப் புத்தகம். இவர் ஒரு நீரிழிவு நோயாளி. இன்று பகல் முதன்முதலாக அவருக்கு சிறு வலிப்பு ஏற்பட்டது. அது விரைவில் குணமடைந்தது, ஒரு மணித்தியாலத்துக்கு முன்பு மாலை 7.00 மணியளவில் மறுபடியும் வலிப்பு ஏற்பட்டது.
*H* - மாலை வணக்கம் ஐயா; இது கண்டி அவசர நோயாளர் காவு வண்டிச் சேவை; தயவுசெய்து உங்கள் முகவரியையும் வீட்டுக்கு வரும் வழியையும் நான் தெரிந்து கொள்ள முடியுமா? மற்ற விடயம், நோயாளியினால் நோயாளர் காவு வண்டிக்கு நடந்து வர முடியுமா என்பதையும் சொல்லுங்கள்.
*I* - தயவுசெய்து கிளினிக் அறிக்கைப் புத்தகம் இருந்தால் அதனைத் தாருங்கள். நோயாளிக்கு வலிப்பு ஏற்பட்டு எவ்வளவு நேரம் ஆகிறது?
*J* - இப்போது நாம் சில சோதனைகள் செய்யப்போகிறோம். தயவுசெய்து வெளியே இருங்கள். தேவைப்பட்டால் உங்களைக் கூப்பிடுகிறேன்.
*K* - ஐயா, உங்களுக்கு நோயாளர் காவு வண்டியின் சமிக்ஞை ஒலி கேட்கிறதா? தயவுசெய்து உங்கள் வீட்டு நுழைவாயிலில் எங்களுக்குத் தெரியக்கூடியவாறு நில்லுங்கள்.

**48.** நோயாளியின் கணவருக்கும் 1990 நோயாளர் காவு வண்டிச் சேவையினருக்கும் இடையே இடம்பெற்ற உரையாடலின் சில பகுதிகள் சரியான ஒழுங்கில் காட்டப்பட்டுள்ள சேர்மானம் பின்வருவனவற்றுள் எது?

(1) *B D A C E* (2) *B D A E C* (3) *B D E A C*
(4) *B D E C A* (5) *B D F H C*

**49.** நோயாளியின் கணவருக்கும் அதிதீவிர சிகிச்சைப் பிரிவின் வைத்தியருக்கும் இடையில் இடம்பெற்ற உரையாடலின் சில பகுதிகள் சரியான ஒழுங்கில் காட்டப்பட்டுள்ள சேர்மானம் பின்வருவனவற்றுள் எது?

(1) *A E I G J* (2) *E I G H J* (3) *F H G I J*
(4) *F H J I G* (5) *F I G H J*

**50.** ஒட்டுமொத்த உரையாடலின் மிகத் தருக்கரீதியான ஒழுங்குமுறை எது?

(1) *A D B C K E F H I G J* (2) *B D A C K E F I G H J* (3) *B D A E C K F H J I G*
(4) *B D E A C K F H I G J* (5) *B D F H C K A E I G J*

* * *

Department of Examinations - Sri Lanka